# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

## Thursday, the 8th September 1960.

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

### I.—QUESTIONS AND ANSWERS.

### STARRED QUESTIONS.

MR. SPEAKER : The Hon. Minister for Industries will be a bit late to-day. So, I shall take up his questions at the end.

*Overhead tanks*

* 532 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா —

தேசிய தண்ணீர் விநியோகத் திட்டத்தின் கீழ் வடாற்காடு மாவட்டத்தில் எந்தெந்தக் கிராமங்களில் "Overhead tanks" கட்ட அனுமதிக்கப்பட்டுள்ளது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : A statement [a] is placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : †

செய்யாறு நதியின் ஓரமாக சில கிராமங்களில் தான் இந்தத் திட்டம் சாங்ஷன் செய்யப்பட்டிருக்கிறது. இன்னும் பல நதிகள் இருக்கின்றனவே. அந்த நதிகளின் ஓரமாக இருக்கும் கிராமங்களில் ஏன் ஒரு சில கிராமங்களையாவது இந்தத் திட்டத்தின் கீழ் எடுத்துக்கொண்டிருக்கக் கூடாது? எந்தத் திட்டத்தையும் அதிகாரிகளைக் கலந்துகொண்டு எடுத்துக் கொள்ளும் போது அந்த அதிகாரிகள் எல்லா எம். எல். ஏ.க்களையும் கலந்துகொள்ளக் கூடாதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த விஷயத்தைப் பற்றி கனம் அங்கத்தினர் என்ன என்னமோ பேசுகிறார். ஆனால், இதிலே ஒன்றைக் கவனிக்கவேண்டும். இந்தத் திட்டம், தண்ணீர் மூலமாக வரக் கூடிய நோய்களான காலரா, டைபாய்டு இவைகளைத் தடுப்பதற்காக ஏற்பட்டது. முதலிலே மத்திய அரசாங்கம், சில ஜில்லாக்களுக்குத்தான் இது அமுலாகவேண்டுமென்று சொன்னார்கள். பிற்பாடு தான் மூன்று நான்கு ஜில்லாக்களைச் சேர்த்தோம். குறிப்பாக, வடாற்காடு, செங்கல் பட்டு, மதுரை ஜில்லாக்கள் முதலில் சேர்க்கப்படவில்லை. இது ஏதோ அவர்கள் திட்டப் பிரகாரம் செய்தார்கள். அந்த வகையிலே பார்த்து வடாற்காடு ஜில்லாவிலும் நதியோரம் இருக்கும் சில கிராமங்களை எடுத்துக் கொண்டார்கள். இதிலே கனம் அங்கத்தினர்களைக் கலந்து கொண்டு செய்வது என்ற அம்மாதிரியான திட்டம் அல்ல இது. சுகாதார இலாகாவினர் எந்த எந்த இடங்கள் என்று பார்த்துப் பொறுக் குகிறார்கள். கனம் அங்கத்தினர் சொல்கிற மாதிரி நதி எங்கெங்கே போகிறதோ அந்த ஓரங்கள் எல்லாம் அல்ல, கொஞ்சங் கொஞ்சமாக, படிப்படியாகத்தான்

---

[a] Printed as Appendix 1 on pages 491–492 infra.

† Expunged as ordered by the Chair.

நாம் போகவேண்டும். அந்த முறையில்தான் செய்யப்படுகிறது. எனக்குத் தெரியும். ஏதோ ஒரு பகுதியிலே மாத்திரம் இந்தத் திட்டம் இருப்பது அல்ல. வாலாஜா தாலூகா, வேலூர் தாலூகா என்று இப்படி எல்லாத் தாலூகாக்களிலும் இருக்கிறது.

**Sri S. M. ANNAMALAI** : மாவட்டக் கவுன்சில் கூட்டங்கள் நடக்கின்ற போதாவது இப்படிப்பட்ட முக்கியமான விஷயங்கள் வரும்போது அவைகளை அங்கேவைத்து, சட்ட மன்ற உறுப்பினர்கள் என்ன என்ன யோசனைகள் சொல்கிறார்கள் என்பதையாவது கேட்டு, அவர்களுடன் கலந்து கொள்ளக் கூடாதா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : இதற்கு யோசனை முக்கியமாக சுகாதார இலாகா மூலமாக வருவது அவசியம்.

**Sri A. A. RASHEED** : Sir, is the Hon. Minister aware that in many villages foundations for overhead tanks have been laid even nine months back, but work has not yet been completed?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : I cannot say ' many places '; may be, in some places; they are being looked into.

**Sri S. RANGANATHA MUDALIAR** : Has this scheme been extended to other district, and if so, to what other districts?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : As I said, originally it was applicable only to five districts; it has been extended to two or three districts more.

**Sri K. B. S. MANI** : இவைகளுக்கு "டைனல் அதாரிடி" சுகாதார இலாகா அதிகாரிகளாக இருந்தபோதிலும், எம்.எல். ஏக்கள் அந்தக் கவுன்சிலிலே குறிப்பிடுகிற கிராமங்களில் பரிசீலனை செய்து, அவர்கள் சொல்வது சரியா என்று பார்த்து, அந்தக் கிராமங்களில் இந்தத் திட்டத்தைக் கொண்டு வருவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : கனம் அங்கத்தினர்களுக்குச் சில கிராமங்களிலே இத் திட்டம் அவசியமாகத் தெரிந்தால், தொத்து நோய் வராமல் தடுப்பதற்கு யோசனை சொல்வதற்குத் தடை இல்லை.

**Sri S. M. ANNAMALAI** : இந்த தேசிய குடி தண்ணீர் திட்டம் ஆரம்பிப்பதற்கு என்னென்ன அம்சங்கள் இருக்கவேண்டும் ? அதாவது அந்தத் திட்டம் ஆரம்பிப்பதற்கு ஒரு கிராமத்தில் எவ்வளவு மக்கள் தொகை இருக்கவேண்டும் என்று சொல்ல முடியுமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU:** காலரா, டைபாய்டு, அம்மை இம்மாதிரியான தொத்து நோய் வரக்கூடிய பிராந்தியம் எங்கே அதிகமாக இருக்கிறதோ அங்கெல்லாம் இந்தத் திட்டம் ஆரம்பிக்கப்படும். 5 000 ஜனத்தொகைக்கு உள் அடங்கி இருக்கிற கிராமத்தில்தான் ஆரம்பிக்கப்படும். 5,00 -க்கு மேலே ஜனதொகை உள்ள கிராமங்களுக்கு இந்தத் திட்டம் இல்லை.

*Village Hospitals*

* 533 Q.—**Sri P. G. MANICKAM** : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) எல்லாவித முறைகளையும் கொண்ட வைத்தியசாலைகளை கிராமங்களிலே அமைப்பதற்கான திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவருவது பற்றி திட்டக் கமிஷனின் அறிக்கையானது நம் மாகாண சர்க்காரின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டதா ?